ஸ்ரீ குருப்யோ நம:

ஜய ஜய சங்கர ! ஹர ஹர சங்கர !!

# ஸ்ரீ வல்லபேச மஹா கணபதி மஹிமை
# ஸ்ரீ கணபதி ஹோமம், ஸ்ரீ விநாயக ஸப்தகம்



## ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேத ஸபா

திருவல்லிக்கேணி : : சென்னை-600 005

1974 ] ஜூலை மாத வெளியீடு [ ஞர்ணயக்ஞும்

# விநாயகப் பெருமான்

விநாயக சதுர்த்தி வருகிறது. பாரத தேசத்துச் சைவப் பெரு மக்கள் அனைவருக்கும் இது ஒரு நன்னாள். விநாயக சதுர்த்தி நன்னாள் மட்டுமல்ல; நன்னாள் எவற்றுக்கும் முன்னாளாகவும் விளங்குகிறது.

விநாயகரை வழிபடுவதோ எளிது; ஆனால் அவரால் பெறக்கூடும் வரமோ பெரிதினும் பெரிது. விநாயகர் பூஜையால் ஔவையார் முதலிய பெருமக்கள் பெற்ற பெருமைக்கு எல்லையும் உண்டோ?

எதைத் தொடங்கினாலும் விநாயகரைப் போற்றிக் கொண்டு தொடங்குவது நமது முன்னோர் முறைமை. வீடு தோறும் பிள்ளையாருக்கென்று ஒரு மாடமும், அதில் பிள்ளையார் மணை என்று ஒரு பீடமும் உண்டு. அந்த மூர்த்தியை வணங்காமல் மனை மக்கள் எதையும் தொடங்குவதில்லை. 'வேழமுகத்து விநாயகனைத் தொழ வாழ்வு மிகுந்து வரும்.' 'வெள்ளைக் கொம்பன் ஐங்கரனைத் தொழ, துள்ளியோடும் தீய வினைகளே.' இவை போன்ற சூத்திரங்களால் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளும் பாடிப் பரவுவார்கள்.

விநாயக மூர்த்தியின் தத்துவம் பெரிது. ஆன்றோர்கள் ஓங்காரத்து உருவத்தையே அவரது திருமேனியாகக் கண்டு போற்றி வந்திருக்கிறார்கள். ஓங்காரம் உருண்ட தோற்றமுடையது. உலகமும் உருண்ட வடிவுடையது. எனவே ஓங்காரமே உலகம்; உலகமே ஓங்காரம். ஓங்கார உருவினராகிய விநாயக மூர்த்தியைத் தொழுது வணங்கிய பின், எதையும் தொடங்குவதன் கருத்து யாதெனில், அகண்ட உலகத்தையும் வணங்கி, உலகத்தின் நடையைத் தனக்கு முன்னதாகக் கொண்டு, அதற்கு அடங்கித் தான் பின் நடந்து, உலகம் வாழ்ந்தால்தான், தான் வாழமுடியும் என்பதை மறவாமல், 'நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை' என்ற நல்லெண்ணத்தை நாள்தோறும் வளர்த்துக் கொள்வதேயாகும்.

தன் வழக்கு வெல்லவும், எதிரி வழக்குத் தோற்கவும் வேண்டிப் பிள்ளையாருக்குப் பெரும் பூஜை செய்யும் பேதை

மக்களும் உண்டு. நன்மைக்குக் கடவுளை நாடலாம், ஒருவரைக் கெடுக்கவா கடவுளைத் தேடுவது? அது அவர்கள் அறியாமை என்று தள்ளுவதை விட்டு, மூத்தோர் முறை என்று கொள்ளுவது குணமல்ல.

ஆகவே, தொன்றுதொட்டு வழங்கும் முதற் பெருந் திருநாளான சதுர்த்தி விழாவை நன்கு நடத்தி, மழையும் மாடும், விளைவும் வீடும், அறமும் அருளும் ஓங்க அமலனைப் பரவுவோமாக.

---

# பிள்ளையார் சதுர்த்தி

---

**"ஞானம் நிறைந்தவர்களுடைய மௌனமே மௌனம். சக்தி நிறைந்தவர்களுடைய பொறுமையே பொறுமை."**

— இது காளிதாஸர் வாக்கு.

ஒரு பிராணியையும் ஹிம்ஸை செய்யாமல், நாணலையும் தழைகளையுமே உட்கொண்டு உலகிலுள்ள எல்லாப் பிராணிகளைவிட அதிக பலம் படைத்து நிற்கும் யானையே பொறுமையின் உருவம்.

பரம்பொருளான சிவபெருமான் நமக்கு முதலில் ஈன்று கொடுத்தது பொறுமையையே. பொறுமையே எல்லா இடையூறுகளையும் நீக்குவது. விக்னராஜரே மஹாகணேசர்.

யானைக்குட்டிக்கு அழகு இரண்டு தந்தங்கள். அழகைவிட அறிவு மேலானது. தம் அழகில் ஒரு பாதியை ஒடித்து அறிவுக்கு உதவினார் ஏகதந்தர் (ஒற்றைக் கொம்பர்). தம் தந்தத்தை ஒடித்து அறிவுநூல் எழுத (பாரதம் எழுத) அதையே எழுதுகோலாக உபயோகித்தார்.

அஹிம்ஸையும் பலமும், பொறுமையும் அறிவும் படிக்கும் பிள்ளைகளுக்கு முதலில் வேண்டும்.

அஹிம்ஸையும் பலமும், பொறுமையும் அறிவும் உருவெடுத்த பிள்ளையாரை ஆவணி வளர்பிறை (பாத்ரபதம்)

நான்காம் திதியன்று (சதுர்த்தி) சிறுவர்கள் எல்லாரும் பூஜிப்போம். ஈசன் எந்தைக்கு நாம் எல்லாரும் சிறுவர்களே. யானைக்குட்டிக்குக் காட்டிலும் தோப்பிலுமுள்ள தழைகளை யெல்லாம் ஒடித்து வருவோம்.

எழுத்தே அக்ஷரம். அகரம் முதல் க்ஷகரம் வரையில் அக்ஷரம்.

ஐம்பத்தோர் அக்ஷரங்களும் மந்த்ரபீடேச்வரி எனப் பெறும் மாத்ருகா ஸரஸ்வதியின் ஒவ்வோர் உறுப்புக்கள் என்று மந்த்ர சாஸ்த்ரம் கூறுகிறது. அக்ஷரபூர்ணமான மந்த்ரபீடேச்வரியின் பிரதிஷ்டையைத் திருவாரூர் ஸ்ரீதியாகராஜஸ்வாமி ஆலயத்தில் காணலாம். குரு சிஷ்யனுக்கு மாத்ருகா மந்த்ர தீக்ஷாபிஷேகம் செய்விக்கும் காலத்தில், அபிஷேக கலசத்தில் ஒவ்வொரு பீஜாக்ஷரத்துக்கும் உரிய ஒவ்வோர் ஒஷதியை (இலையை)ப் போடும்படி கூறியிருக்கிறது. அந்தப் பீஜாக்ஷரத்தினால் ஏற்படும் ஆத்மசக்திக்கு அந்த அந்த ஒஷதி துணை செய்கிறது என்பது கருத்து.

மஹாகணபதி உபாஸனைக்கு இருபத்தொரு பத்திரங்கள், பத்ரங்களின் ஒஷதி வீர்யங்கள் துணையாகின்றன. அவையாவன:—

(1) முல்லை இலை, (2) கரிசிலாங்கண்ணி இலை, (3) வில்வம், (4) வெள்ளறுகம்புல் வேரோடு கூடியது, (5) இலந்தை இலை, (6) ஊமத்தை இலை, (7) துளசி, (8) வன்னி இலை, (9) நாயுருவி இலை, (10) கண்டங்கத்திரி இலை, (11) அரளி இலை, (12) எருக்கிலை, (13) மருதை இலை, (14) விஷ்ணுக்கிராந்தி இலை, (15) மாதுள இலை, (16) தேவதாரு இலை, (17) மருவு, (18) அரச இலை, (19) சாதிமல்லிகை இலை, (20) தாழை இலை. (21) அகத்திக்கீரை இலை.

பிள்ளையார் சதுர்த்திக்கு இந்த இருபத்தோர் இலைகளையும் சேகரித்து அன்று அவருக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

மாவெனும் (மா-யானை) போர்வை போர்த்தி, அன்பெனும் நம் பிள்ளையாருக்கு அன்புக்குரிய இனிமையெனும் மதுரத்தைப் பூர்ணமாக உள்ளடக்கி, மாவெனும் போர்வை போர்த்திய இருபத்தொரு மோதகங்களைச் சமர்ப்பிக்க வேண்டும். நமது பிறவி பூர்ணத் தன்மையடையத் துணை செய்யும் இருபத்தொரு விதமான அநுக்கிரகத்தை வேண்டிக்

கொண்டு சமர்ப்பிக்க வேண்டும். விநாயகரின் அநுக்கிரகத்தின் இருபத்தொரு விதமான பலன்களாவன— (1) தர்மம், (2) பொருள், (3) இன்பம், (4) ஸௌபாக்யம், (5) கல்வி, (6) பெருந்தன்மை, (7) நல்வாழ்வுடன் கூடிய மோக்ஷம், (8) முகத்தில் பால்வடியும் தன்மை, (9) வீரலக்ஷ்மி கடாக்ஷம், (10) விஜயலக்ஷ்மி கடாக்ஷம், (11) எல்லாரும் தன்னிடம் அன்பாக இருக்கும் தன்மை, (12) குடும்பத்தில் கர்ப்பரக்ஷை, (13) மக்கட்பேறு, (14) நுண்ணறிவு, (15) நற்புகழ், (16) சோகத்தினால் வாடாத தன்மை, (17) அசுபங்களை அகற்றல், (18) தன் வாக்குக்கு எதிர்வாக்கு அடங்கிப் போதல், (19) கோபம் கொண்டவர்களைச் சாந்தப்படுத்தும் தன்மை, (20) பிறர் ஏவும் ஆபிசாரம் அடங்குதல், (21) துயர் தீர்தல்.

धर्मप्रदोऽर्थदः कामदाता सौभाग्यवर्धनः ।
विद्याप्रदो विभवदो भुक्तिमुक्तिफलप्रदः ॥
आभिरूप्यकरो वीरश्रीप्रदो विजयप्रदः ।
सर्ववश्यकरो गर्भदोषहा पुत्रपौत्रदः ॥
मेधादः कीर्तिदः शोकहारी दौर्भाग्यनाशनः ।
प्रतिवादिमुखस्तंभो रुष्टचित्तप्रसादनः ।
पराभिचारशमनो दुःखभञ्जनकारकः ॥

விநாயக சதுர்த்தியன்றைத் தினம் எல்லாரும் சொல்ல வேண்டிய ச்லோகம் ஒன்று உண்டு. அதாவது—

सिंहः प्रसेनमवधीत्, सिंहो जाम्बवता हतः ।
सुकुमारक मा रोदीः, तव ह्येष स्यमन्तकः ॥

ஸிம்ஹ: ப்ரஸேநம் அவதீத், ஸிம்ஹோ ஜாம்பவதா ஹத: ।
ஸுகுமாரக மா ரோதீ: தவ ஹ்யேஷ ஸ்யமந்தக: ॥

துவாரகையிலிருந்து தென்மேற்கு முகமாக யதுவம்சத்தில் பிறந்த ப்ரஸேனன் என்பவன், தற்கால ரேடியத்தைப்

போன்று ஸ்வயம்பிரகாசத் தன்மையில் அதைவிட மேலான தாயும், ஸூர்ய மண்டலத்திலிருந்து கிடைத்ததுமான ஸ்யமந்தகமென்னும் ரத்தினத்தைத் தரித்துக் கொண்டு, காட்டின் வழியே குதிரையேறிச் செல்ல, அவனை ஒரு சிங்கம் கொன்றது. அந்தச் சிங்கத்தைக் காட்டில் தெய்வீகக் கரடியுருவங் கொண்ட ஜாம்பவான் கொன்று, அந்த மணியை வெகுதூரம் பாதாளத்திலுள்ள தன் குகையில் குழந்தையிடப்பட்ட தொட்டிலில் கட்டினர்.

ஸ்ரீகிருஷ்ண பகவான் ஒரு சமயம் சுக்லபக்ஷ சதுர்த்தியன்று சந்திரனைப் பார்த்தார்.

சந்திர மண்டலத்துக்கு அதிஷ்டான தேவதையான சந்திரன் ஒருகால் தன் அழகின் செருக்கினால் விநாயகரைப் பழித்தான். அந்தப் பழிப்பினால் சந்திரனை ஒருவருமே பார்க்கக் கூடாது என்ற சாபம் ஏற்பட்டது. அந்தச் சாபத்தின் நிவிருத்தியைச் சந்திரன் வேண்ட, மாலையில் ஆகாசத்தில் பார்த்தவுடனே கண்ணுக்கெதிரில் நிற்கும் நாலாம் பிறைச் சந்திரனை மாத்திரம் பார்க்கக்கூடாது என்று அந்தச் சாபம் குறைக்கப்பட்டது.

நாலாம் பிறைச் சந்திரனைப் பார்த்தவனுக்கு வீண்பழி வரும். ஸ்ரீகிருஷ்ண பகவான் ஒரு தடவை நாலாம் பிறைச் சந்திரனைப் பார்த்தார். ஈச்வராவதாரமாக இருந்தாலும் மனிதவேஷம் தரித்தபிறகு, பிரபஞ்சச் சட்டங்களுக்குத் தாமும் உட்பட்டே தீரவேண்டும் என்னும் தத்துவத்தை அவர் விளக்கினர். பிரஸேனனைக் கொன்று ஸ்யமந்தக மணியை ஸ்ரீகிருஷ்ண பகவானே அபஹரித்தார் என்னும் வீண் அபவாதத்துக்கு அவர் உட்பட்டார். உலகத்தோருக்கு உண்மையைத் தெரியப்படுத்தித் தம் அபவாதத்தை நீக்கிக்கொள்ள அவர் புறப்பட்டார்; காட்டுக்குச் சென்றார்; பிரஸேனன் பிரிந்துபோன வழியை அவனது குதிரையின் காலடிச் சுவட்டைக்கொண்டு தொடர்ந்து சென்றார். ஜாம்பவானின் குகையின் துவாரத்தில் குதிரையையும் பிரஸேனனையும் கொன்ற சிங்கத்தின் உயிரற்ற சரீரத்தையும் பார்த்தார். குகைக்குள் வெகு தூரம் சென்றார். ஜாம்பவானின் புத்திரியான ஜாம்பவதி தன் தம்பியைத் தொட்டிலிலிட்டுக் குழந்தை அழாதிருக்குமாறு தாலாட்டிக் கொண்டிருந்தாள். தொட்டிலின் விதானத்தில் ஸ்யமந்தகமணி கட்டியிருப்ப

தைக் கிருஷ்ணன் கண்டார். அந்தத் தாலாட்டுப் பாட்டு இது—

सिंह प्रसेनमवधीत्, सिंहो जाम्बवता हतः ।
सुकुमारक मा रोदीः, तव ह्येष स्यमन्तकः ॥

**ஸிம்ஹ: ப்ரஸேநமவதீத், ஸிம்ஹோ ஜாம்பவதா ஹத: ।**
**ஸுகுமாரக மா ரோதீ: தவ ஹ்யேஷ ஸ்யமந்தக: ॥**

ஜாம்பவான் ஸ்ரீகிருஷ்ணனோடு யுத்தம் செய்தார்; பகவானின் பலத்தைக் கண்டு நம் தெய்வமான ஸ்ரீராமனே இவன் என்று கண்டு கொண்டார்; ஜாம்பவதியையும் ஸ்யமந்தக மணியையும் பகவானுக்கு ஸமர்ப்பித்தார். ஜாம்பவதி கல்யாணம் நடந்தது.

இந்தத் தாலாட்டுப் பாட்டை விநாயக சதுர்த்தியன்று சொல்லுகிறவர்களுக்கு வருஷம் முழுவதும் எந்தச் சுக்லபக்ஷ சதுர்த்தியில் சந்திரனைக் கண்டிருந்தாலும் அந்தத் தோஷம் பரிஹாரமாகிறது.

# ஸ்ரீவல்லபேச மஹா கணபதியின் மஹிமை

பீஜாபூர, கத, இக்ஷுகார்முக ருஜா சக்ர, அப்ஜ, பாச,
உத்பல, வ்ரீஹ்யக்ர, ஸ்வ விஷாண ரத்னகலச
ப்ரோத்யத் கராம் போருஹ: ॥
த்யேயோ வல்லபயா ஸபத்மகரயாச்லிஷ்டோ
ஜ்வலத்பூஷயா, விச்வோத்பத்தி, விபத்தி, ஸம்ஸ்திதி
கர: விக்னேச இஷ்டார்த்தத:

இந்தச்லோகம் ஸ்ரீவல்லபேச மஹா கணபதியின் த்யானச்லோகமாகும்.

மாதுளம்பழம், கதை, கரும்புவில், சூலம், சக்ரம், தாமரை மலர், பாசக்கயிறு, நிலோத்பல மலர், நெற்கதிர், தனது ஒடிந்த தந்தம், ரத்ன கலசம், இவைகளை கைகளில்

தாங்கியவருமான ஸ்ரீமஹாகணபதி நம்மால் தியானிக்கத் தக்கவர். தாமரையைக் கையில் ஏந்திய வல்லபாதேவியை அணைத்துக் கொண்டுள்ள இந்த வல்லபேச மஹாகணபதி உலகத்தின் உற்பத்தி, அழிவு, காப்பாற்றுதல் ஆகிய முத் தொழிலையும் செய்பவராவார். இந்த விக்னேச கணபதி நமது இஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் கடவுளாக இருப்ப வர். இந்த உருவத்தை மனதில் வைத்துக்கொண்டு இவரை ஆராதிக்க வேண்டும்.

# கணபதி ஹோமம்

கணபதி ஹோமம் தாந்திரீக விதியாகவோ சதுஷ்பாத்ர விதியாகவோ, அல்லது ஷட்பாத்திர விதியாகவோ, குரு உப தேசப்படி செய்யவேண்டும்.

மோதகம், அவல், நெற்பொரி, ஸத்துமா, கருப்பங்கழி, தேங்காய், சுத்தமான எள், பழுத்த வாழைப்பழம் இவை களில் தேன், நெய், பால், வெல்லம் இவைகளைச் சேர்த்து ஹோமம் செய்யவேண்டும்.

கொழுக்கட்டை 8, அவல் பிடி 8, நெற்பொரி பிடி 8, ஸத்துமா அல்லது நெய்யப்பம் 8, கரும்புத்துண்டு 8, தேங் காய் 8 பாகமாகப் பிளந்தது, எள் 100 அல்லது 8 சிட்டிகை, வாழைப்பழம் 8 இவைகளைத் தனித்தனியாகவோ, கலந்தோ, ஹோமம் செய்யலாம்.

அக்னியைப் ப்ரதிஷ்டை செய்து கணபதியை ஆவாஹ னம் செய்து திரவ்யங்களை மூன்றாகப் பங்கிட்டு இரண்டு பங்கு ஹோமம் ஒரு பங்கு நைவேத்யம். இவ்விதம் ஹோமம் செய்து தேங்காயின் கொட்டாங்கச்சி மட்டை இவைகளையும் ஹோமம் செய்து அருகம்புல் மும்மூன்றாக 8 தடவை ஹோமம் செய்யவும், ஹோமம் செய்யும் விதம் குருமுகமா கத் தெரிந்து கொள்ளவேண்டியது. ஒரு தேங்காயைத் துண்டு துண்டாகச்செய்து காலையில் செய்து வந்தால் இந்த உலகிற்கு வேண்டியபொருளை கணபதி கண்டிப்பாக அருள் செய்வார்.

இந்த ஹோமத்தை காலை உதயத்திலிருந்து 600 சுவாஸ காலமான கணபதி காலத்தில்தான் செய்யவேண்டும்.

# அஷ்ட த்ரவ்யங்களின் தத்வம்

## 1. மோதகம்

உபனிஷத்தில் கூறும் மோதம் தான் மோதகம். மோதம் என்றால் ஆனந்தம்.

இந்த மோதகம் என்னும் கொழுக்கட்டை அரிசி மாவினால் செய்து மறைப்பிற்குள்ளில் தேங்காய் வெல்லம் சேர்ந்த பூர்ணத்துடன் விளங்குகிறது.

எங்கும் பரிபூர்ணமாகவும் ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதாகவும் இருக்கும். ஸச்சிதானந்த மயமான ப்ரும்மம் நாம ரூபங்களால் (பெயர், உருவம்) மறைக்கப்பட்டு விளங்குகின்றது. அரிசிமாவினால் செய்த மாவுதான் கவசரூபமாக இருந்து கொண்டு பூர்ணமான ப்ரும்மத்தை மறைக்கின்றது. பெயரும் உருவமும் கொழுக்கட்டையாக இருப்பதால்தான் கொழுக்கட்டை எனப் பெயர் வந்தது.

இக்காணும் ப்ரபஞ்சம் நாமரூபாத்மகமானது. இந்த நாம ரூபங்கள் பூர்ணமான ப்ரும்மத்தை மறைத்துக் கொழுக்கட்டையைத் தன் கையில் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்தக் கொழுக்கட்டை விநாயகருக்கு மிகவும் ப்ரியம். தன் பக்தர்களுக்கு நாமரூபாத்மகமான ப்ரபஞ்ச லோகத்தையும், எங்கும் நிறைந்த ஸச்சிதானந்த மயமான ப்ரும்ம போதத்தையும் அருள் செய்பவர்.

## 2. அவல்

ஸம்ஸார பாதையாகின்ற ஜலத்தில் நன்றாக வேகவைத்து கஷ்டங்களாகின்ற உலக்கையால் மொத்துண்டுச் சிதைந்து போயிருக்கும் மனோவ்ருத்திதான் அவல்.

## 3. நெற்பொரி

தபஸ்ஸினால் வறுபட்டு ஸத்வ குணத்தை அடைந்திருக்கும் மனோவ்ருத்திதான் நெற்பொரி.

## 4. ஸத்துமா

இந்திரியங்களால் இழுக்கப்பட்ட சப்தாதி விஷயங்கள், மனோதார்ட்யத்தால் பொடிப் பொடியாகச் செய்வதுதான் ஸத்துமா.

## 5. கரும்புக்கணு

விதவிதமான மனோ வ்ருத்திகளைக் காட்டுவது.

## 6. தேங்காய்

நன்றாக மரத்திலிருந்து காய்ந்து தானாகவே விழுந்த தேங்காய் தான் (உள்ளே இருக்கும் ஜலம் சுண்டிப்போன தேங்காய்) ஹோமத்திற்கு மிகவும் சிறந்தது. ஓர் ஜீவன் ஸம்சாரமாகிய மரத்திலிருந்து விடுபட்டு, ஸம்ஸாரத்தில் பற்றில்லாமல் தன் சரீரத்திற்கும் தனக்கும் சம்பந்தமில்லாமல், தான் ப்ரபஞ்சத்திலிருந்தாலும் பற்றில்லாமலிருக்கும் தன்மைதான் ஜீவன் முக்த ஸ்திதி. தானாகப் பழுத்து விழுந்து காய்ந்து ஜலம் சுண்டிப்போன தேங்காய் இதைத்தான் காட்டுகிறது.

## 7. திலம்

நன்றாக அரைபட்டால்தான் உள்ளிருக்கும் எண்ணெ வரும். இது போல் ஜீவன் நன்றாக ஸம்சாரத்தில் கஷ்டப் படக் கஷ்டப்படத்தான் ஆத்ம ஞானம் ஏற்படும். இந்த ஜீவ பாவத்தைக் காட்டுவதுதான் திலம். (எள்)

## 8. பழம்

மனது பரிபக்குவமடைவதை குறிப்பது தான் வாழைப் பழம். இவைதான் அஷ்ட த்ரவியங்களின் தத்வம்.

இவருக்கு அறுகம்புல் மிகவும் ப்ரியமானது. வடமொழி யில் "தூர்வா" என்று சொல்வார்கள். பூஜை செய்யும் போது இரண்டிரண்டு நுனிகளாலும் ஹோமம் செய்யும் போது மும்மூன்று நுனிகளாலும் செய்யவேண்டும்.

தூர்வா என்று சொன்னால் கடபயாதி ஸங்க்யா ரீதியாக 48 என்றாகும். எண்கள் கடபயாதியாகக் கணக்குப் பண்ணும்போது இடமிருந்து வலமாகத்தான் கணக்குப் பண்ண வேண்டும்.

ஜீவ : என்றாலும் 48. இந்த தூர்வா என்னும் பதத்தால் குறிப்பிடப்படும் 48 என்ற எண்கள் ஜீவ: என்ற பதத்தால் குறிப்பிடப்படும். 48 என்ற எண்களைக் குறிப்பிடுவதால் இந்த தூர்வா என்னும் அறுகம்புல் ஜீவ பாவத்தைத் தான் குறிப்பிடுகின்றது.

அறுகம்புல் ஓரிடத்தில் வேரூன்றி அங்கிருந்து கிளைகிளம்பி மற்றொரிடத்தில் வேரூன்றி இவ்விதம் வெகுதூரம் செல்லும். இதுபோல் ஜீவனும் ஓர் சரீரத்தை ஆச்ரயித்து அதைவிட்டு மற்றொரு சரீரத்தை ஆச்ரயித்து இவ்விதம் போய்க்கொண்டேயிருக்கும். அறுகம்புல் இரண்டு நுனிகளால்தான் (அதாவது வடமொழியில் அங்குரம் என்று சொல்வார்கள்) பூஜை செய்ய வேண்டும். அறுகம்புல்லின் மூன்று நுனிகளால்தான் ஹோமம் செய்ய வேண்டும். இந்த அறுகம்புல் நுனிகள் ஜீவனின் வாஸனையைக் குறிக்கின்றது.

இரண்டிரண்டாக இருக்கும். புண்யம் - பாவம் முதலான வாஸனைகளை விநாயகரின் இரண்டு பாதாம் புஜங்களிலும் அர்ப்பணம் செய்யவேண்டும்.

மும்மூன்றாக இருக்கும் வாஸனாரூபமான த்ரிபுடிகளையும் மும்மலங்களையும் மூன்றுகனி ஸ்வரூபமான விநாயகரிடத்தில் ஹோமம் செய்து மும்மலங்களையும் சாம்பலாகச் செய்ய வேண்டும். இதனால்தான் பூஜையில் இரண்டு நுனிகளைகளையும், அக்னியில் மூன்று நுனிகளையும் ஹோமம் செய்ய வேண்டுமென கூறப்படுகின்றது.

அறுகம்புல் வைத்திய சாஸ்திரத்தில் அனேக வியாதிகளுக்கு மருந்தாகக் கூறப்படுகின்றது. விநாயகரின் பாதங்களில் இரண்டு நுனிகளான அறுகம்புல்லால் பூஜை செய்து அதையே மருந்தாக உபயோகித்தால் அநேக வியாதிகள் நிவர்த்தியாகும்.

இந்த இருபத்தெட்டு அக்ஷரத்தையுடைய கணபதி தான் முதற் கடவுள். இவருடைய அவதார பேதங்கள் தான்

விஞயக புராணம், முத்கல புராணம், பார்கவ புராணம் முதலிய க்ரந்தங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

ஒரு சமயம் தேவர்களின் உயர்ந்த நிலைமையைப் பார்த்து பொருமை கொண்ட அசுரர்கள், தேவர்களை ஜெயிக்கும்படியான வரபலனைப் பரமேஸ்வரனிடத்திலிருந்து பெற்று தேவர்களை மிகவும் துன்புறுத்தினர். தேவர்கள் ஈசனையணுகி அசுரர்களின் திமிரை அடக்கும்படியான ஓர் குமாரனை அருள வேண்டுமென மஹாதேவனைப் பிரார்த்திக்க அவரும் உங்கள் கஷ்டங்களை நீக்க ஓர் புத்திரன் ஏற்படப் போகிருன் என்று அருளி, பார்வதியினிடத்தில் ஓா புத்திரனை உத்பாதனம் செய்து விக்னேஸ்வரன் என பெயரிட்டு அஸுரர்களுக்குக் கஷ்டங்களைக் கொடுத்து, தேவர்களைக் காப்பாற்றுவாயாக என்று பரமேஸ்வரன் கூற, அந்தக் குமாரனும் அசுரர்கள் செய்யும் கார்யத்திலெல்லாம் விகனங்களை உண்டுபண்ணி அவர்கள் வரபலன்களைக் குறைத்து தேவர்களுக்கு மிகவும் உதவியாகயிருந்து தேவர்களின் கஷ்டங்களைப் போக்கிஞர் என்று லிங்கபுராணம் கூறுகின்றது.

சுவேத வராஹ கல்பத்தில் ஒரு சமயம் பார்வதிக்குத் தனியாகவே ஒரு ஏவலாள் இருக்கவேண்டுமெனத் தன் பணிப்பெண்களான ஜயா - விஜயா கூற தேவி அதை கவனிக்காமல் இருந்தாள்.

மற்ருெரு சமயம் பார்வதி அந்தப்புரத்தில் நீராடும் போது பரமேஸ்வரன் வந்து சேர்ந்தார். அப்பொழுது நான் தேவிக்குத் தனக்கென ஒரு ஏவலாள் வேண்டுமென தீர்மானித்து தன் சரீரத்திலிருந்து அழுக்கைத் திரட்டி எடுத்து அதை ஓர் உருவமாகச் செய்தாள். உடனே அந்த உருவமும் உயிர் பெற்று எழுந்துத் தனக்கென்ன கட்டளையென்று பார்வதியைப் பிரார்த்தனை செய்ய தேவியும் தான் அந்தப்புரத்தில் இருக்கும்போது தன் உத்தரவில்லாமல் யாரையும் அனுமதிக்கக் கூடாது, இந்த வேலையைச் செய்துவா, என்று கட்டளையிட்டாள். அந்த உருவமும் அவ்விதமே செய்து வந்தது.

ஒரு சமயம் தேவி அந்தப்புரத்திலிருக்கும்போது தேவியைத் தேடி மஹாதேவன் வந்தார். அப்போது காவலாளியும் பரமேஸ்வரனைத் தடுத்து அம்பாள் உத்தரவின்றி யாரும் உள்ளே செல்லக் கூடாது என்று தடுத்து நிறுத்த, பரமேஸ்

வரனே தன்னை யாரும் தடுத்த நிறுத்த முடியாது என்று சொல்லியும் காவலாளி பரமேஸ்வரனை உள்ளே செல்ல அனுமதிக்கவில்லை. ஈஸ்வரனே சபிப்பேன் என்று சொல்லியும் காவலாளி அஞ்சவில்லை. ஈஸ்வரன் அவனைத் தள்ளிக் கொண்டு உள்ளே செல்ல முயற்சித்தபோது வேலையாளும் தன் கையில் இருந்த பிரம்பால் மஹாதேவனை இரண்டு அடி அடித்தான்.

பரமேஸ்வரனும் அதிக கோபம்கொண்டு தன் பூதகணங்களை அழைத்து மரியாதை இல்லாத வேளையாளைக் கொல்லும்படி உத்தரவிட்டார். பூதகணங்களும் தேவியின் அருளால் வந்த இவ்வுருவத்தை ஒன்றும் செய்ய முடியாமல் தோற்று ஓடிவிட்டார்கள். அப்போது விஷ்ணு முதலான தேவர்களும் வந்து இவனிடம் யுத்தம் செய்யமுடியாமல் ஓடி விட்டனர். இதைப் பார்த்து தேவி தன் வேலையாளுக்கு உதவியாக இரு சக்திகளை உண்டுபண்ணி அனுப்பினாள். அந்த சக்திகளும் மற்ற தேவர்கள் விடும் அஸ்த்திரங்களை பயனற்றதாகவே செய்து வந்தார்கள், இதைப் பார்த்த விஷ்ணு நேர்முகமாக இவர்களை ஜெயிக்க முடியாது என்று தீர்மானித்துத் தனது மாயையால் ஓர் குழப்பத்தை உண்டுபண்ணினார். அப்போது அந்த இருசக்திகளும் நம் உதவி இந்த வேலையாளுக்கு தேவையில்லை என்று நினைத்துத் திரும்பிச் சென்று விட்டனர். உடனே இந்த பாலகனுக்கு தேவர்களை வெல்லும் சக்தியில்லாமல் போகவே, பரமேஸ்வரன் அந்த பாலகனின் தலையை வெட்டி எறிந்தார்.

இந்த சமாசாரத்தை நாரதர் மூலம் அறிந்த பார்வதி தேவி மிகக் கோபமடைந்து ஆயிரக்கணக்கான சக்திகளைத் தோற்றுவித்து வஞ்சகமாக தன் குமாரனைக் கொன்ற தேவர்கள் எல்லோரையும் அழித்துவிடும்படி உத்தரவிட்டு சக்திகளை ஏவினாள். அந்த கணக்கிலடங்காத சக்திகள் மும்மூர்த்திகளையும் தேவர்களையும் பலவிதத்திலும் துன்புறுத்தத் தொடங்கவே, நாரதர் முதலான மஹரிஷிகள் தேவியை வந்து வணங்கி கோபத்தை அடக்கவேணுமாய் பிரார்த்தித்தனர். தேவியும் உயிரிழந்த குமாரன் உயிர்பெற்று என்னிடத்தில் வரவேண்டும். இல்லையென்றால் ஸர்வநாசம் தான் என்று தேவி உரைத்தாள்.

இதைக் கேட்டு பரமேஸ்வரனும் தன் கணங்களை அழைத்து வடக்கு நோக்கிச் செல்லுங்கள், முதலில் தென்

படும் பிராணியின் கழுத்தை அறுத்துக் கொண்டு வாருங்கள். என்று உத்தரவு செய்ய பூதகணங்களும் அவ்விதமே சென்று கொண்டிருக்கும் போது யானை ஒன்று தென்பட, அதன் கழுத்தை அறுத்துக் கொண்டு வந்தார்கள். உடனே மஹா தேவனும் அந்த யானைத் தலையை கழுத்தறுக்கப்பட்ட பால கனின் உடலில் சேர்க்க பாலகனும் உயிர் பெற்றெழுந்தான்.

அந்த யானைக்கு ஒரு தந்தமே இருந்ததால். விநாயகரும் ஏகதந்தர் என்று பெயர் பெற்றார்.

தன் குமாரன் உயிர் பெற்றெழுந்து வந்ததைப் பார்த்து அன்னையும் களிப்படைந்து அந்த பாலகனை அழைத்துக் கொண்டு மஹாதேவனிடம் வர, பரமேஸ்வரனும் தன் குழந்தையை இருகரங்களாலும் தழுவி களிப்படைந்தார். குமாரனும் தன் தந்தையையும் விஷ்ணு முதலான மற்ற தேவர்களையும் வணங்கித் தான் செய்த காரியத்தை மன்னித் தருளும்படி வேண்டினார். அந்தக் குமாரனைப் பரமேஸ்வரன் தன் கணங்களுக்குத் தலைவனாக நியமித்ததால் கணபதி என்று பெயர் பெற்றாரென்று சிவபுராணம் கூறுகின்றது.

ஒரு சமயம் முனிவர்களுக்குத் தாங்கள் செய்யும் காரியங் களெல்லாம் சரிதானா இல்லையா என்பதை எவ்விதம் அறி வது? இதை அறியும் பொருட்டு கைலாசபதியை அடைந் தார்கள். 'சம்போ! மஹாதேவா! நாங்கள் செய்யும் எக் காரியமும் சரிதானா, இல்லையா என்று எங்களால் உணர முடியவில்லை. ஆதலால் எங்களுக்கு கெட்ட காரியங்களை எடுத்துரைப்பதோடு, அதைச் செய்யவிடாமல் தடுத்தாட் கொள்ள வேண்டுகிறோம்' என்றனர்.

கைலாசபதி அருகில் இருந்த பார்வதியைப் பார்த்து, தேவி, இம்முனிவர்களுக்கு எவ்விதம் நல்வழி காட்டலாம் என்று கேட்க, அச்சமயம் அவரிடமிருந்து மிக அழகான ஓர் குமாரன் தோன்றினார். காந்தியால் ஜ்வலிக்கும் அழகு டன் விளங்கும் அந்தக் குமாரன் மோகன வடிவைப் பார்த்து, எந்தப் பெண்ணும் மையல் கொள்வாள், (பார்வதி தேவிக்கே சற்று மனம் தடுமாறியதாக புராணத்திலுள்ளது.) உடனே பார்வதியும் அந்தக் குமாரனைப் பார்த்து, பிறரை மயக்கும் இந்த மோஹன வடிவம் போய், பருத்த தொந்தி யும் யானைத் தலையும் உனக்கு ஏற்பட வேண்டியது என்று சபித்தாள்.

சிவனும் தன் குமாரனைப் பார்த்து, 'நீ இன்று முதல் என் கணங்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பாயாக! நீ கணேசன் என்றும் விக்னராஜன் என்றும் இன்று முதல் அழைக்கப் படுவாய்! வெற்றிக்கும் தோல்விக்கும் நீயே காரணபூதன். எந்தக் காரியம் செய்தாலும் முதலில் உன்னை வணங்கித்தான் ஜனங்கள் செய்ய வேண்டும். அவ்விதம் ஜனங்கள் செய்யவில்லையானால் அவர்கள் தொடங்கும் எந்தக் காரியமும் நிறைவேறாது' என்று சொன்னார். இவ்விதம் வராஹ புராணம் கூறுகின்றது.

துவாபரயுகம் போய் கலியுகம் வந்ததும் ஜனங்கள் எல்லோரும் ஸோமேஸ்வரனை தரிசனம் செய்து (பாபிகளும் நீசர்களும் தரிசனம் செய்த புண்ணியத்தால்) சொர்க்கம் சென்றனர். எவ்வளவு பாபம் செய்தாலும் ஸோமேஸ்வரனை தரிசித்த மாத்திரத்திலேயே எல்லா பாபங்களும் அழிந்து விட்டன. எமனுக்கு வேலையில்லை. ஜனங்களால் சொர்க்கம் நிரம்பி விட்டது' இதையறிந்த இந்திரன் பரமேஸ்வரனிடம் முறையிட்டான். அதுகேட்ட ஈசன் 'தேவேந்திரா! இதில் நான் ஒன்றும் செய்வதற்கில்லை; ஸோமேஸ்வர தரிசனத்தால் பாபங்கள் அகன்றுவிடும். ஆகையால் பார்வதியைப் பார்த்து பிரார்த்திப்பாயாக! தேவி ஏதாவது வழி செய்வாள்' என்று சொல்ல, இந்திரனும் தாயை அடைந்து வணங்கிக் குறையை முறையிட்டான்.

தேவி! பாபிகளும் ஸோமேஸ்வரனை தரிசனம் செய்வதால் பாப பலனை அடைவதில்லை, எல்லோரும் சொர்க்கம் வந்து சேருகின்றனர். எமனுக்கு வேலையில்லை தாங்கள் தான் தயவு செய்து இதற்கு ஒரு வழி காட்டவேண்டுமென தேவேந்திரன் பார்வதி தேவியை வேண்டினான். இதைக் கேட்ட தேவியும் கருணையுள்ளம் கொண்டு, தன் உடலைக் கைகளால் தடவ, அப்போது நான்கு கரங்களுடனும் யானைத் தலையுடனும் விநாயகர் தோன்றினார். இந்த விக்னேஸ்வரன் மக்களுக்கு விக்கினங்களை உண்டுபண்ணி ஸோமேஸ்வரனை தரிசிக்காமலிருக்கச் செய்வான். எவனொருவன் ஏகாக்ர சித்தத்துடன் தனக்கேற்படும் விக்கினங்களை லட்சியம் செய்யாது ஸோமேஸ்வரனை தரிசிக்கின்றானோ அவனே சொர்க்கத்துக்கு வருவான் என்று தேவி சொன்னாள். பிறகு, தன் குமாரனைப்பார்த்து, குழந்தாய்! ஸோமேஸ்வரனை தரிசனம் செய்ய செல்பவர்களுக்கு விக்னத்தை உண்டு பண்ணு. பொன் பொருள்களை கொடுத்து தடுத்து நிறுத்து.

இகலோக வாழ்க்கையை வெறுத்து, பரலோகத்தை இச்சிப்பவர்களுக்கு நின் அருளால் கஷ்டங்கள் நீங்கி, அவர்களை சொர்க்கலோகம் செல்ல அருள் செய் என்று கூறினள். இவ்விதம் விநாயகர் அவதாரத்தை பற்றி ஸ்காந்தம் கூறுகின்றது.

ஒரு சமயம் சந்திரன் சாபத்தால் கலையிழந்தான். இதைப் பார்த்த விநாயகர் சந்திரனுக்கேற்பட்ட கஷ்டத்தைப் போக்கச் சந்திரனைத் தன் நெற்றியில் திலகமாக அணிந்தார். இதனால் பாலசந்திரன் என்று பெயர் பெற்றார்.

மற்றொரு சமயம் அக்கினிக்கு ஏற்பட்ட சாபத்தைப் போக்கத் தனது காதுகள் இரண்டையுமே முறங்களாக்கி விசிறி அக்கினியின் தாபத்தைத் தணித்தார். இதனால் சூர்ப்பகர்ணன் என்ற பெயர் பெற்றார்.

பரசுராமன் பரமேஸ்வரனால் அளிக்கப்பட்ட வெண்மழுவால் இருபத்தொரு தலைமுறையினரை அழித்துப் பரமேஸ்வரனை தரிசனம் செய்வதற்காகக் கைலாசத்திற்குச் சென்றார். அப்போது வாயிற்காப்பாளக இருக்கும் கணபதியால் தடுத்து நிறுத்தப்பட்டு தேவியும் ஈசனும் ஏகாந்தமாயிருப்பதால் உட்செல்வதற்கு இது சமயமில்லை என்றார். பரசுராமனே விநாயகரை லட்சியம் செய்யாது அவரைத் தள்ளிக்கொண்டு உள்ளே போக முயன்ற போது விநாயகர் அவரை தடுத்து நிறுத்தினர். பரசுராமன் அதிக கோபங்கொண்டு தனது பரசுவால் விநாயகரை அடித்தார். கணபதி அந்தப் பரசு தன்னை ஒன்றும் செய்யாது என்றறிந்திருந்தாலும் தன் தந்தையால் அளிக்கப்பட்ட மழுவிற்கு மரியாதை கொடுப்பதற்காகத் தன் இடது கொம்பால் அந்தப் பரசுவை ஏற்றார். அப்போது தன் இடது கொம்பு முறியவே ஏகதந்தர் என்று பெயர் பெற்றார்.

ஒரு சமயத்தில் சதுர்த்தியன்று பக்தர்களால் அளிக்கப்பட்ட கொழுக்கட்டைகளைத் தன் வயிற்றில் ஏராளமாக வைத்துக் கொண்டு புறப்பட்டார். அவரைத் தாங்கமாட்டாமல் மூஷிகமும் (மூஞ்சுறு) திணறிக் கொண்டு சென்றது. அப்போது அந்த வழியில் குறுக்காக ஒரு பாம்பு சென்றது. பாம்பைப் பார்த்து மூஞ்சுறு பயந்து விழுந்தது. அப்போது அதன் மேலிருந்த விநாயகர் கீழே விழுந்து தரையில் உருண்டார். இதனால் விநாயகரின் வயிறு வெடித்து

வயிற்றிலிருந்த கொழுக்கட்டைகள் தரையில் சிதறி ஓடின. விநாயகரும அந்தக் கொழுக்கட்டைகளை வயிற்றிலே திணித்துக் கொண்டு இந்த அமளிக்குக் காரணமான பாம்பை தன் இடுப்பைச் சுற்றி கட்டிக் கொண்டார். இருபத்தேழு மனைவியர்களுடன் வானவீதியில் உலாவும் சந்திரன் இதைப் பார்த்து கேலியாகச் சிரித்தார். அதனால் கோபங்கொண்ட விநாயகர் தன் ஓர் தந்தத்தை ஒடித்து சந்திரனைத் தாக்கினார். சந்திரனும் தன் ஒளியிழந்து வருந்தினான். இதனால் உலகம் முழுவதும் இருள் சூழ, தேவர்களும் சந்திரன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டினர். விநாயகரும் சந்திரன் 15 நாட்களுக்கு ஒளி தேய்ந்தும் 15 நாட்களுக்கு ஒளி விருத்தியடைந்தும் இருப்பான் என்று அருளினார்.

இவ்விதம் ஒவ்வொரு புராணமும், அவதாரத்தையும் பெயர் வந்த காரணத்தையும் வெவ்வேறு விதமாக வர்ணிக்கிறது.

12 ஜ்யோதிர் லிங்க க்ஷேத்திரமான பரளீமாஹாத்மியம் 16-ம் அத்தியாயத்தில் வேறொரு வகையாக விநாயகாவதாரம் சொல்லப்படுகின்றது. இதில் ஸூதர் சொல்லுகின்றார்:

பார்வதி தேவி ப்ரபாகர க்ஷேத்திரத்தை அடைந்த போது அந்த க்ஷேத்திரமானது பரம சோபையுடனும் துக்கமில்லாததாகவும் அதிதிகளைப் பூஜிப்பதில் ஈடுபட்டதாகவும் விளங்கிற்று. தேவர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், தேவரிஷிகள், பிரும்மரிஷிகள், நாகஸ்ரீதிகள், அப்ஸரஸ்திரீகள் முதலான பேர்கள் தங்கள் தங்கள் உருவங்களை மறைத்துக் கொண்டு அம்பாளுக்கு சுச்ருஷை செய்து வந்தார்கள். புத்தி, லக்ஷ்மீ, வ்ருத்தி, த்ருதி, கீர்த்தி, புஷ்டி முதலானவர்களும் மலைமகளை நன்றாக சுச்ருஷித்து வந்தார்கள்.

அம்பாள் விநாயகனை கர்ப்பத்தில் தரித்து 10 மாதம் ஆனவுடன் தான் வேறெங்காவது சென்று சிலகாலம் சுகமாக விளையாட வேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. இவ்விதம் தேவி நினைத்ததும் ஜயா விஜயா என்னும் ஸகிகள் ஓர் விமானத்தைக் கொண்டு வந்தனர். தேவியும் இரு ஸகிகளுடன் அந்த விமானத்தில் ஏறி வேடிக்கையாக வனங்கள், உபவனங்கள் இவைகளுக்கெல்லாம் சென்று, ஓர் தாமரைத் தடாகத்தைப் பார்த்து ஸகிகளுடன் அத்தடாகத்தில் இறங்கி

நீராடிவிட்டு, அதிவிதமான நிழலுடன் கூடிய மரங்களின் சுவட்டிலும் விளையாடிக் களைத்துப் போய் தாமரை மலர் களால் செய்யப்பட்ட படுக்கையில் சயனம் செய்து ஸுகமாக தூங்கினாள்.

அந்த ஹிமவத் புத்திரியான தேவி கர்ப்பகௌரவத்தா லும் விளையாடிக் களைப்படைந்ததாலும் சிரஸ்ஸை விபரீத மாக வைத்துக் கொண்டு தூங்கினாள். இவ்விதம் அம்பாள் உறங்கும்போது ஜயா என்னும் ஸகி தன் இருப்பிடத்திற்குச் சென்றாள். விஜயா என்பவள் அம்பாள் காலை வருடிக் கொண்டு பூர்ண கர்ப்பமாயிருக்கும் அம்பாளைப் பார்த்துக் கொண்டே ஸந்தோஷத்துடன் இருந்தாள்.

இந்த சமயத்தில் மஹா பலசாலியான மஹாவிக்னன் என்னும் அசுரன் ப்ராம்மண வேஷத்தை தரித்துக்கொண்டு அம்பாள் உறங்கும் பத்ம வனத்தை அடைந்து, நித்ரையில் இருக்கும் அம்பாளையும், விழித்துக் கொண்டிருக்கும் விஜயா என்னும் ஸகியையும் பார்த்து தன் அஸுர பாவத்தை மறைத்துச் சிரித்துக் கொண்டே கேட்கிறான்:

'தாமரைமலர் போலிருக்கும் கண்களையுடையவளும், மிக வும் மெல்லியதான மத்ய பாகத்தையுடையவளும் புத்தி சாலியாயும் இருக்கும் இந்த ஸ்திரீ யார்? பழுத்த கோவைப் பழம் போல் அதரங்களையும் சந்திரனைப் பழிக்கும் முகத்தையு முடைய நீ யார்? நாங்கள் ப்ராம்மணர்கள்; உலகத்தைப் பரிசுத்தமாகச் செய்ய நாங்கள் ஸஞ்சரிக்கின்றோம். எங்களைப் போல் இருப்பவர்களிடத்தில் எவன் உண்மையை மறைக கின்றானோ அவன் ரௌரவமென்னும் நரகத்தையடைவான். ஆகையால் இந்த ஸ்திரீ யார்? எவருடைய பத்தினி? ஏன் இந்த பத்ம வனத்தில் வந்து சயனித்துக் கொண்டிருக்கிறாள்? இதன் உண்மையைச் சொல்வாயாக!' என்று கேட்க, விஜயா கூறுகின்றாள்.

யாரால் அந்த உலகமானது தரிக்கப்படுகின்றதோ! யார் இந்த உலகத்தைப் படைத்தாளோ! அந்த மலைமகளான பார்வதிதான் இவள். லோக க்ஷேமத்திற்காக மஹாவிக்னன் என்னும் அசுரனை ஸம்ஹாரம் செய்ய மஹாதேவன் உத்திர வின்படி கர்ப்பம் தரித்திருக்கின்றாள். பூர்ணமான கர்ப்ப பாரத்தைத் தாங்கமுடியாததினாலும், ஜலக்ரீடை செய்த தாலும் களைப்படைந்து இந்த வனத்தில் தூங்குகிறாள் என்று

சொல்லவே, மஹாவிக்னன் என்னும் அஸுரனும் பய மடைந்து, அந்த சிசுவால் தனக்கு நாசம் ஏற்படக்கூடாது என்றெண்ணி, விபரீதமாகப் படுத்திருக்கும் பார்வதி தேவியின் கர்ப்பத்தில் பிரவேசித்து அந்த சிசுவின் தலையை துண்டித்துவிட்டான்.

தேவியும் விழிப்படைந்து விமானத்திலேறி வேகமாக ப்ரபாகர க்ஷேத்திரத்தை அடைந்தாள். பரமேஸ்வரனும் தேவியின் ப்ரசவ காலத்தையறிந்து நந்தி முதலான கணங்களுடன் எப்போது ஆகாயமார்க்கமாக கிளம்பினரோ, அப்போதே கஜமுகன் என்னும் அசுரனும் தன் ஸைன்யங்களுடன் பரமேஸ்வரனிடத்தில் யுத்தத்திற்காக வந்தான். அந்த மஹா பலசாலியான கஜமுகாஸுரனும் சிரித்துக் கொண்டு பரமேஸ்வரனைப் பார்த்துச் சொல்கின்றான்:

மூன்று உலகங்களிலும் உன்போல பலசாலி யாருமில்லை யென கேள்வியுற்று உன்னுடன் யுத்தம் செய்ய வந்திருக்கின்றேன். ஆகையால் நின்று என்னுடன் யுத்தம் செய்வாயாக! என்று சொன்னான். அச்சொல்லைக்கேட்டு மஹேஸ்வரன் மஹா கோபத்துடன் தன் கைத்தலத்தால் அந்த கஜமுகாஸுரனை ஓங்கி அடிக்க அவன் தலையும் உடலிலிருந்து வேறுபட்டு விழுந்தது. அஸுரனின் தலை விழுந்த அதே நேரத்தில் பார்வதி தேவியும் ப்ரசவத்திற்கு ஆயத்தமானாள். மஹா தேவனும் தேவகணங்களுடன் ப்ரபாகர க்ஷேத்திரத்தை வந்தடைந்தார். அப்போது பார்வதியும் சிரஸ்ஸில்லாத குழந்தையைப் பெற்றெடுத்தாள். சிரஸ்ஸில்லாத குழந்தையைப் பார்த்து பார்வதிதேவி ஆச்சரியமடைந்து அந்தர்த்ருஷ்டியால் விஜயா சொன்ன விஷயத்தையறிந்து கோபத்தால் உதடு துடிக்க துஷ்டபுத்தியே! உண்மையைச் சொல்கிறேன் என்று சொல்லி மஹாவிக்னஸுரனுக்கு கர்ப்ப விஷயத்தை சொல்லி விக்னத்தை உண்டுபண்ணினாய்? ஆகையால் என் உலகிலிருந்தும் விழுந்து பூலோகத்தையடைந்து மஹா பாஷண்டியாக அதிக காலம் துக்கத்துடன் இருப்பாயாக! எனக்கு ப்ரியமில்லாத காரியத்தைச் செய்ததின் பலனை அனுபவிப்பாயாக! என்று விஜயாவை சபித்தாள்.

பார்வதி இவ்விதம் சபித்துக்கொண்டிருக்கும்போது சங்கரன் பார்வதி தேவியின் ப்ரசவத்தையறிந்து, சிரஸ்ஸில்லாத குழந்தை பிறந்திருப்பதைப் பார்த்து யோகேஸ்வரனை சங்கரனும் ஓர் யானையின் கழுத்தை அறுத்து அந்த

சிரஸ்ஸில்லாத பாலகனின் உடலில் ஒட்டவைத்தார். யானை முகத்தோடு உள்ள குழந்தையைப்பார்த்து தேவர் களெல்லாம் மிகவும் களிப்படைந்தார்கள். பார்வதியும் பரமேஸ்வரனும் தன் கணங்களுடன் மிகக் களிப்படைந்தார் கள். இந்த கஜானனைத் தன் கணங்களுக்கதிபதியாக சமபு அபிஷேகம் செய்தார்.

இந்த கணபதிக்கு மஹாதேவன் தன் பரசுவையும். விஷ்ணு சக்கரத்தையும், வருணன் பாசத்தையும், மன்மதன் கரும்பு வில்லையும், இந்திரன் அங்குசத்தையும், பூமி நெற்க திரையும், ஸமுத்திர ராஜன் தாமரை மலரையும். அக்னி சுத்தமான வஸ்திரத்தையும் மிகவெண்மையான சங்கத்தை யும் நவரத்ன மாலையையும் அளித்தார்கள். தர்மதேவதை மூஷிகமாக (மூஞ்சுறு) மாறி வாஹனமாயிற்று. சாரணர் கள் அனேக விதமான வாத்யங்களை முழங்கினர். ஆதி சேஷன் உபவீதனுக ஆனுன். ஸூர்யன் தேஹ காந்தியாக வும், சந்திரன் நெற்றியில் திலகமாகவும் ஆனுர்கள்.

பார்வதிதேவி அந்த கஜானனுக்கு, ஸித்தி-புத்தி-வ்ருத்தி ஸுமதி-காந்தி - ப்ரஜ்ஞா - மேதை - நல்லவாக்கையும் அளித் தாள். மேலும் வித்யாதிபத்யத்தையும், நினைத்த மாத்திரத் திலேயே விக்னங்களைப் போக்கும் சக்திகளையும் கொடுத்தாள்.

இந்த கஜானனன் மன்ற தேவர்களால் துதிக்கப்பட்ட வனுக மஹாவிக்னன் என்னும் அஸுரனை ஸம்ஹாரம் செய் வதற்காக மூஷிக வாஹனத்தில் ஆரோகணம் செய்து கிளம்பினுர். தேவர்களும் ஜய! ஜய! என்று கோஷம் செய் தார்கள். அந்த சப்தத்தால் மூன்று உலகமும் வ்யாபிக்கப் பட்டது. இவ்வித கோலாஹலத்துடன் மஹாவிக்னன் என் னும் அஸுரனை ஜயிப்பதற்காக கஜானன் கிளம்பினுன்.

மஹாவிக்னன் என்னும் அஸுரனும் ப்ரும்மாவிடத்தில் பெற்ற வரத்தின் கர்வத்தால் அறுபதாயிரம் விக்னர் களுடன் பார்வதி ஸுதனுன கஜானனனை ஜயிப்பதற்காகப் புறப்பட்டான். அறுபதாயிரம் விக்னர்களும் அநேக ஆயு தங்களால் விநாயகரை தாக்கினுர்கள். இவ்விதம் ஆயுத வர்ஷங்களால் அடிக்கப்பட்ட கஜானனும் சிறிதும் கலக்க மடையாது, தன் பிதாவால் அளிக்கப்பட்ட பரசுவால் இந்த அஸ்திர வர்ஷங்களை முறித்தெறிந்தார்.

இதனுல் அதிக கோபமுற்ற விக்னர்களும் மறுபடியும் அஸ்த்ர சஸ்த்ர வர்ஷங்களால் கஜானனனைத் தாக்கினர்கள். இந்த சஸ்த்ர வர்ஷங்களால் அடிக்கப்பட்ட கஜானனனைப் பார்த்து, தேவர்களும் பயமடைந்து கதறினுர்கள், ஆனுல் கணங்களுக்கெல்லாம் தலைவனுன கஜானனனே அதி கூர்மையான பரசுவால் மஹாவிக்னனை தாக்கினுர். மஹா விக்னனும் பரசுபாத அஸ்திரத்திற்கு பலியானதைப் பார்த்த மற்ற விக்னர்கள் பயந்து ஓடிவிட்டனர்,

தேவர்களும் புஷ்பவர்ஷங்களைப் பொழிந்து ஜய! ஜய! என்று கோஷித்தார்கள் இவ்விதம் கணேசாவாதரத்தை பரளீ மாஹாத்மியம் கூறுகின்றது. இவ்வாறு விநாயகரின் அவதாரபேதங்களை அநேக விதமாக வேவ்வேறு புராணங்கள் கூறுகிறது. மஹாராஷ்டிரர்கள்தான் கணபதியை அதிகம் கொண்டாடுகிருர்கள்.

---

# ஸ்ரீகணபதிஹோமம்

---

சுக்லாம்...சாந்தயே ஓம்பூ I :...வரோம் மமோபாத்த... ப்ரீத்யர்த்தம் சுபே சோபனே முஹூர்த்தே ஆத்யப்ரஹ்மண: த்விதீய பரார்த்தே ச்வேதவராஹகல்பே வைவஸ்வத மந்வந்தரே அஷ்டாவிம்சதி தமே கலிபுகே ப்ரதமே பாதே ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோ: தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்த்தமானே வ்யாவஹாரிகே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே......நாம ஸம்வத்ஸரே ......அயனே...ருதௌ......மாஸே......பக்ஷே......சுபதிதௌ......வாஸர யுக்தாயாம்......நக்ஷத்ர யுக்தாயாம் சுபயோக சுபகரண ஏவங்குணவிசேஷண விசிஷ்டாயாம், அஸ்யாம்,.....சுபதிதௌ......அஸ்மாகம் ஸகுடும்பாணும், க்ஷேமஸ்தைர்ய வீர்ய விஜய ஆயுராரோக்ய ஐச்வர்யாணும் அபிவ்ருத்யர்த்தம் ஸமஸ்த விக்நோபசாந்த்யர்தம், மஹா கணபதி ப்ரஸாத ஸித்யர்த்தம் ஸர்வ கார்யானுகூல்ய ஸித்யர்த்தம், (நாளிகேரேண அல்லது லாஜை:) மஹா கணபதிஹோமம் கரிஷ்யே II அப உபஸ்பர்ச்ய

# அக்னி ப்ரதிஷ்டை

ஹோமம் செய்வதற்காகப் போட்டிருக்குமிடத்தில் தெற்கே ஆரம்பித்து மேற்கேயிருந்து கிழக்காக முடிக்கும் படியாய் மூன்று கோடுகள் இழுத்து தெற்கே ஆரம்பித்து மேற்குப் புறமாக முதலில் வடக்கு முடிய மூன்று கோடு போட்டு நடுவில் ஒரு ஸமித்தை வைத்து ப்ரோக்ஷித்து அந்த ஸமித்தை எடுத்து தென் மேற்கே எறிந்துவிட்டு அக்நியை அமைத்து கிழக்கே ஜலம் வைத்து ஒரு ஸமித்தை அதன் மீது வைத்து (ஜ்வாலையாகும்படிச் செய்து) கணபதி மூலமந்த்ர ஜபம் செய்யவேண்டும்.

அஸ்ய ஸ்ரீ மகாகணபதி மூலமந்த்ரஸ்ய கனகரிஷி: அனுஷ்டுப்சந்த: மஹாகணபதி: தேவதா l காம் பீஜம் கீம் l சக்தி: கூம் கீலகம் மஹாகணபதி ப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே வினியோக: ll காம் அங்குஷ்டாப்யாம் நம: l கீம் தர்ஜநீப்யாம் நம: l கூம் மத்யமாப்யாம் நம: l கைம் அநாமிகாப்யாம் நம: l கௌம் கநிஷ்டிகாப்யாம் நம: l க: கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: ll (கரந்யாஸம்) காம் ஹ்ருதயாய நம: l கீம் சிரஸே ஸ்வாஹா l கூம் சிகாயை வஷட் l கைம் கவசாய ஹும் l கௌம் நேத்ரத்ரயாய வௌஷட் l க: அஸ்த்ராய பட் ll ஓம் பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த: ll (அங்கந்யாஸம்)

## த்யாநம்

பீஜாபூரகதேக்ஷு கார்முகருஜா சக்ராப்ஜபாசோத்பல
வ்ரீஹ்யக்ரஸ்வவிஷாணரத் நகலச ப்ரோத்யத்
கராம் போருஹ:
த்யேயோ வல்லபயா ஸபத்மகரயா ஸ்விஷ்டோஜ்
ஜ்வலத்பூஷயா
விச்வோத்பத்தி விபத்தி ஸம்ஸ்திதகர: விக்நேஸ்வரோ
அபிஷ்டத: ll

## மூலமந்த்ர ஜபம்—ஹோமம்

தியானம் செய்து ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத ஸர்வஜநம் மே வசமாநய ஸ்வாஹா, அக்நௌ மஹா கணபதிம் த்யாயாமி ஆவாஹயாமி,

ஆஸனம் ஸமர்ப்பயாமி, பாத்யம் ஸமர்ப்பயாமி,
அர்க்யம் ஸமர்ப்பயாமி, ஆசமநீயம் ஸமர்ப்பயாமி,
ஸ்நாபயாமி, கந்தாந்தாரயாமி, அக்ஷதான் ஸமர்ப்பயாமி,
புஷ்பாணி ஸமர்ப்பயாமி, தூபம் ஆக்ராபயாமி தீபம்
தர்சயாமி

என்ற வரை செய்து நைவேத்ய, ஸ்தானத்தில் ஹோமம் செய்யவேண்டும். ஹோமத்திற்கு முன் அக்நி பிரதிஷ்டை ஆனபின் அக்நி ஸ்தானத்திற்குச் செய்வதுபோல் கிழக்கு நுனியாகவும் வடக்கு நுனியாகவும் தர்ப்பங்களால் பரிஸ்தரணம் அமைத்து அக்நிக்கு வடபுறத்தில் கிழக்கு நுனியாக தர்ப்பம் அமைத்து அதில் தர்வி, ஆஜ்யஸ்தாலி, இதர தர்வி, ப்ரோக்ஷணி பாத்ரம் எனும் நான்கு பாத்ரங்களை இரண்டு இரண்டாகக் கவிழ்த்து வைத்து, பொரியும் இரு தர்ப்பங்களால் நுனி சமமாய் இருக்கும்படிச் செய்த ப்ராதேச மாத்ரம் நீளமுள்ள பவித்ரத்தால் அவைகளைத் தொட்டு ப்ரோக்ஷணி பாத்ரத்தை எடுத்து நமக்கும் அக்நிக்கும் இடையில் பரிஸ் தரணத்திற்கு மேற்கே வடக்கு நுனியாக இருகைகளால் பிடித்து கிழக்கு முகமாக மூன்று முறை குழவியால் அரைப்பதுபோல் ஜலத்தைத் தள்ளி கவிழ்த்துள்ள பாத்ரங்களை நிமிர்த்தி மூன்று முறை எல்லா ஜலத்தாலும் ப்ரோக்ஷித்து ப்ரோக்ஷணி பாத்திரத்தைத் தென்புறத்தில் வைக்கவேண்டும். நெய்யை அக்நியில் காய்ச்சி பவித்திரத்துடன் உள்ள ஆஜ்ய பாத்திரத்தில் ஆஜ்யத்தை விட்டு அக்நிக்கு வடபுறக்கோடியில் வரட்டியில் தணல்களை எடுத்து வைத்து அதன்மீது ஆஜ்ய பாத்திரத்தை வைத்து ஒரு தர்ப்பத்தைக் கொளுத்தி அந்த ஆஜ்யத்தின் மீது காட்டி அந்த தர்ப்பத்தை வடக்கே எறிய வேண்டும். ஒரு அங்குல நீளத்தில் இரண்டு தர்ப்பத்தை நுனிகளைக் கிள்ளி ஜலத்தில் நனைத்து அந்த ஆஜ்யத்தில் போடவேண்டும், பிறகு ஒரு தர்ப்பத்தைக் கொளுத்தி ஆஜ்ய பாத்திரத்தை ஜ்வாலையுடன் மூன்று முறை சுற்றி வடக்கே எறிந்து ஆஜ்ய பாத்திரத்தை வடக்கே இரக்கி (அக்நியை அக்நியில் சேர்த்து) நம் எதிரில் வைத்துக்கொண்டு பவித்ர முடியால் முன்போல் நெய்யைப் போகவர மூன்று முறை அரைத்து (உத்பவனம் என்று பெயர்) பவித்திரத்தின் முடியை அவிழ்த்து ஜலத்தைத் தொட்டு கிழக்கு நுனியாக அக்நியில் வைக்க வேண்டும். இது ஆஜ்ய ஸம்ஸ்காரம். இது ஸகல ஹோமங்களுக்கும் பொதுவானது. பிறகு தர்வி ஸம்ஸ்காரம்:—இரு

பலாச நடு இலைகளையும் கையிலெடுத்து அக்நியில் காட்டி தர்ப்பங்களால் துடைத்து மறுபடியும் அக்நியில் காய்ச்சி ப்ரோக்ஷித்து ஆஜ்ய பாத்திரத்திற்கு வடக்கே வைத்து தர்ப் பங்களை ஜலத்தால் தொட்டு அக்நியில் அர்ப்பணம் செய்ய வேண்டும். அதன் பிறகு அக்நிக்கு பரிஷேசனம் செய்க.

அதிதேனு மன்யஸ்வ அநுமதேநு மன்யஸ்வ—ஸரஸ்வதேநு மன்யஸ்வ—தேவஸவித: ப்ரஸுவ ।

அக்நியை மங்களாக்ஷதையால் நான்கு புறமும் அலங்கரித்து இதர தர்வியில் நான்கு முறை நெய்யை எடுத்து ப்ரதான தர்வியால் விட்டு (அக்நி ஸித்யர்த்தம் வியாஹ்ருதி ஹோமம் கரிஷ்யே) எனக் கூறி............(ஓம் பூர்புவஸ்ஸுவ: ஸ்வாஹா என்று ஹோமம் செய்து ப்ரஜாபதய இதம் நம:) என்று கூறவேண்டும். (அக்நயே ஸ்வாஹா — அக்நய இதம் நம:) வடகிழக்கில் அக்நியில் ஹோமம் செய்து (ஸோமாய ஸ்வாஹா — ஸோமாய இதம் நம:) தென்கிழக்கில் ஹோமம் செய்யவேண்டும். பிறகு (அக்நயே ஸ்வாஹா—அக்நய இதம் நம:) நடுவில் ஹோமம் செய்க.

இதன் பிறகு மூல மந்த்ரத்தால் 16 ஆஜ்யாஹுதி செய்து, 16 முறை நெல் பொரியால் ஹோமம் செய்க.

## பிரார்த்தனை

ஸகுடும்பஸ்ய அநுகூலம் ப்ரயச்ச ப்ரயச்ச
பிரதிகூலம் நாசய நாசய ஸம்பதம் வர்த்தய வர்த்தய
தநதான்ய ஸமிருத்திம் ப்ரயச்ச ப்ரயச்ச
ஸர்வத்ர விஜயம் ப்ரயச்ச ப்ரயச்ச ॥
அதிதேன்வமக்குஸ்தா: அநுமதேன்வமக்குஸ்தா:
ஸரஸ்வதேன்வமக்குஸ்தா: தேவஸவித: ப்ராஸா வீ:

என பரிஷேசநம் செய்து அக்னிகபஸ்தாநம் கரிஷ்யே என ஸமித்தை அக்நியில் வைத்து நமஸ்காரம் செய்க, பஸ்மாவை இட்டுக் கொள்க.

ஸ்ரீ கணபதி ஹோமம் முற்றிற்று.

---

ஸ்ரீ மஹா கணபதயே நம:

# ஸ்ரீ விநாயக ஸப்தகம்

குருவே ! பரமன் கொழுந்தே ! பணிந்தேன் !
குவலயம் போற்றும் கணநாதா !
வருவாய் நினைவில் வந்தெனை ஆள்வாய் !
வடிவேலவனின் சோதரனே ;
அருள்வாய் ! உனையே அனுதினம் பணிவேன் !
அன்னை பராசக்தி அருள் மகனே !
திருமால் மருகா ! திருவடி சரணம் !
தீனரக்ஷகனே ! கணநாதா ! (1)

ஆனையின் அன்பன் அழகு முருகனின்
அண்ணனாய் உலகில் அவதரித்தாய் !
ஆனைமுகத்தொடு ஐங்கரங் கொண்டதோர்
அற்புத வடிவே ! கணநாதா !
யான்என தென்னும் எண்ணங்கள் நீங்கி
இகபர சுகமதை எனக்களிப்பாய் !
யானுனை என்றும் இராப்பகல் தொழுவேன் !
என்துயர் களைவாய் ! கணநாதா ! (2)

குஞ்சரனே ! எழிற் குஞ்சரி நாதனும்
குகசரவண பவ சோதரனே !
வெஞ்சம ரெதிலும் வெற்றியே தருவாய் !
வேழ முகத்தோய் ! கணநாதா !
அஞ்சிடும் அன்பருக் கபயம் நீ அளிப்பாய் !
அரவனைத் தெனையே ஆண்டருள்வாய் !
பஞ்சமி ! பைரவி ! பர்வத புத்திரி !
பார்வதி மைந்தா ! கணநாதா ! (3)

வல்லபை நாதா ! விக்ன விநாயகா !
வாழ்த்திப் பணிந்தேன் உன்பதமே !
வல்வினை எல்லாம் வலிமை இழந்தே
வாடிடச் செய்வாய் ! கணநாதா !

தொல்வினை யாலிவண் துயருறும் அடியேன்
துன்பமெலாநீ துடைத்திடுவாய் !
அல்லொடு பகலும் அனவரதமும் உன்
அடியிணை தொழுவேன் ! கணநாதா ! (4)

வானொடு நீரும் வளியும் தீயும்
வையகம் யாவும் உன்வடிவே !
மானுட வாழ்வை மகிழ்வுறச் செய்வாய் !
மங்கலப் பொருளே ! கணநாதா !
தேனொடு பாலும் தெங்கொடு பழமும்
தெவிட்டா அமுதும் தினம் படைப்பேன் !
ஊனொடு உயிரும் உணர்வும் புரப்பாய் !
உன்னடி தொழுதேன் ! கணநாதா ! (5)

ஓமெனும் வடிவே உன்வடி வாமென
உலகிற் கெலாம்நீ உணர்த்திடுவாய் !
ஆமெனச் சொல்வாய் ! அன்னை குமாரா !
ஆதரித் தருள்வாய் ! கணநாதா !
ஓமெனும் ஒலியில் உன்குரல் கேட்டே
உளமகிழ்ந்துன்புகழ் பாடிடுவேன் !
ஓமெனும் பொருளே ! உமையவள் பாலா !
ஒருபரம் பொருளே ! கணநாதா ! (6)

சங்கரன் மகனே ! சஞ்சலம் தீர்ப்பாய் !
சக்தி குமாரா ! கணநாதா !
ஐங்கரனே ! உன் அடியிணை தொழுதேன் !
அடைக்கலம் நீயே ! கணநாதா !
சங்கரித் திடுவாய் சங்கடம் எல்லாம்
சம்பு குமாரா ! கணநாதா !
சங்கரி மைந்தா ! சந்ததம் பணிவேன் !
சரணம் சரணம் ! கணநாதா ! (7)

---

# அஷ்டோத்தர சதநாமங்கள்

—ஃஃஃஃ—

ஓம் விநாயகாய நம:
விக்கினராஜாய நம:
கணநாதாய நம:
கஜாநநாய நம:
மகோதராய நம:
மகாதேவாய நம:
ஸ்நிக்தாஞ்சனசமத்
யுதயே நம:
ஏகதம்ஷ்டிரோத்கடாய
நம:
தேவாய நம:
கஜவக்திராய நம: 10
மகாபலாய நம:
நாகயக்ஞோபவீதிநே நம:
நாகாபரணபூஷிதாய நம:
சர்வார்த்தசம்பதா
தாராய நம:
கஜுத்தியக்ஷாய நம:
வரப்பிரதாய நம:
உருத்திரதநயாய நம:
உதாராய நம:
நாயகாய நம:
பிரமதாதிபாய நம: 20
பத்மராகத்யுதயே நம:
சோமாய நம:
ரத்தமால்யா னுலேபனுய
நம:
அபலாய நம:
பாலரூபிணே நம:
சுமுகாய நம:
சுரப்பிரியாய நம:
பிரபவே நம:
புண்ணியாய நம:
பூர்ணுய நம: 30

ஓம் பூர்ணேதராய நம:
புண்ணியகீர்த்தயே நம:
புராதநாய நம:
பர்த்திரே நம:
சிவாய நம:
சாந்தாய நம:
சகந்நாதாய நம:
சாசுவதாய நம:
சுவேதபரிதாநாய நம:
திரயக்ஷாய நம: 40
கனகசுப்பிரபாய நம:
சிவசாம்யாய நம:
மஹாதேஜசே நம:
*மஹாபலபராக்ரமாய
நம:
சர்வக்ஞாய நம:
ஞானசம்பன்னுய நம:
சர்வாபரணபூஷிதாய நம:
பாபாபநோதநாய நம:
தேவாய நம:
அலக்ஷ்மிமலநாசநாய
நம: 50
குமாராய நம:
காரணுய நம:
காந்தாய நம:
சர்வசித்திப்பிரதாயகாய
நம:
விபவே நம:
ஈசாய நம:
ஈசபுத்திராய நம:
ஈப்சிதகர்த்தப்பிரதாய
நம:
ஸ்ரீதாய நம:
சுபாய நம: 60

---

* 'மஹாப்பிராக்ஞாய நம:' என்றும் பாடம்

ஓம் ஏகதந்தாய நம:
ஏகவீராய நம:
அநேகதாய நம:
ஏகஸ்மை நம:
ஏகப்ருதே நம:
விசுவப்ருதே நம:
விசுவபுஜே நம:
விசுவஸ்மை நம:
சர்வப்பிரபவே நம:
70 சர்வபாவநாய நம:
பாக்கியதாய நம:
பவதாய நம:
பாகிநே நம:
போகதாய நம:
போகபாவநாய நம:
கவயே நம:
காரியாய நம:
கநீநாய நம:
கர்த்திரே நம:
80 கிருதவே நம:
கிருதிநே நம:
கிருத்தியவிதே நம:
அத்யுக்கிராய நம:
காந்ததர்சிநே நம:

ஓம் கிருதாந்தகாய நம:
ஸ்துத்தியாய நம:
ஸ்தோத்திரே நம:
ஸ்தோகாய நம:
ஸ்தோத்திராய நம:
திரயீமயாய நம: 90
வேதாய நம:
வேதாந்தகிருதே நம:
வேத்தியாய நம:
விதுஷாம்புத்திதாய நம:
புத்தாய நம:
ஓங்காராய நம:
பிரமவிதே நம:
பிராமண்ய நம:
பிரமணே நம:
பிரமபராய நம: 100
பராய நம:
சர்வசாக்ஷிணே நம:
சத்கதயே நம:
சர்வலோகவெத்யாய நம:
சர்வதாய நம:
சுபகாய நம:
அவ்வியாய நம:
ஓம் ஸ்ரீசித்திவிநாயகாய நம:

—⁂—

உ

# விநாயகரின் பன்னிருதிருநாமங்கள்

1. முனிவி லமரர் சுமுகரென
முனிவ ரேக தந்தரெனப்
புனித முறுங்கந் திருவர்கள்கிம்
புருடர் கபில ரெனக்குய்யர்
இனிமை யுறுஞ்சா ரணர்சித்த
ரிவர்கள் கெசநற் கன்னரென
மனித ரிலம்போ தரரென்ன
மருவும் விருகம் விகடரென

2. விலங்கல் மரம்விக் கினராசர்
வியாளங் கணநா யகர்திக்கின்
இலங்கு வோர்தூ மிரகேது
எழிலார் நதியா திகள்தீர்த்தம்
அலங்கும் கணத் தியக்கர்பயி
ராதி கிருமி கீடங்கள்
துலங்கும் பால சந்திரர்மற்
றுயிரின் தொகுதி கசானனரே.

3. எனவே பெயரிட் டனேவோரு
மேத்தி யிறைஞ்சித் தத்தமது
மனமார் விருப்பி னுறைபதியின்
மருவி வாழ்ந்தா ரிப்பெயர்கள்
முனமார் கலியைக் கடைந்தெடுத்த
முதிர்வான் சுவையி லமிர்தேபோற்
கனமார் பெயரா யிரந்தம்முட்
கருத்தாற் றெரிந்து கொண்டனவாம்.

4. பெயரா யிரமு மெடுத்தோதிற்
பெருகும் பயனிப் பன்னிரண்டு
பெயர்மாத் திரையால் வருமென்னிற்
பெயர்த்தும் பெருமை பேசுவதென்
பெயரீ ராறு களிற்றுமுகப்
பெருமா னடியைப் பூசித்துப்
பெயரா வன்பின் யாவர்களும்
பேணுங் கருமந் தொறுமுரைப்பார்.

## விநாயகர் சொரூப இலக்கணம்

1. கங்கையும் பணிவெண் திங்களும் விரைத்த
கடுக்கையந் தொங்கலு மரவும்
தங்குபொற் சடையும் முக்கணுந் தாதை
தாணுவென் றுயர்த்தமென் மலர்க்கை
அங்குச பாச மணிந்துவெற் புயிர்த்த
வாரணங்கு அன்னையென் றுணர்த்த
வெங்கலி முழுதுந் துடைத்தருள் பட்டி
விநாயகன் சேவடி பணிவாம்.

(பேரூர்ப்புராணம்)

(இது சிவமும் சத்தியுமாக விளங்குபவர் விநாயகர் என்பதைக் காட்டும்.)

2. முகமதியும் கட்கடுவும் களவளையும்
உத்தரிய முகப டாத்தும்
புகர்மதமா மழகளிறும் கரமலர்கற்
பகதருவும் பொருவில் பாதத்
திகழுறுபங் கயநிதியும் தோன்றுபரைப்
பாற்கடலில் சிறந்து தோன்றும்
உகலருமைங் கரவமுதை யுளங்குளிரப்
பூரித்தே யுவகை பூப்பாம்.

(சிதம்பர சுவாமிகள்)

விநாயகரை அமுதமாகவும், அவர் தோன்றிய இடமாகிய பராசக்தியைப் பாற்கடலாகவும் 'உவமிக்கப் பட்டுளது.

## விநாயகரைப்பற்றி சிவபூஜை விளக்கத்திற் கண்ட தத்துவ விளக்கம்

விநாயகர் யானை முகம், மூன்று கண்கள், ஐந்துகரங்கள், பெருத்த வயிறு, ஒரு கொம்பு, மும்மதம், இரண்டு திருவடி உடையவர், தமது கரங்களில் தந்தம், பாசம், அங்குசம், பாஞ்சசனியம் முதலியவற்றைக் கொண்டுளார்.

கயமுகனைச் சங்கரிப்பதற்காக முரித்த ஒரு கொம்பை ஏந்தியது மும்மலங்களை நீக்குபவர் தாமென்பதைக் காட்டு தற்காம். உயிர்களைப் பாதிக்கும் ஆணவமலமாகிய யானையைப் பாசத்தாற் கட்டி, அங்குசத்தால் அடக்கி, மறைத்தலென்னும் கருணைபுரிபவர் தாமென்பதை அறிவித் தற்காகப் பாசாங்குசங்களை ஏந்தினர். ஆணவத்தைப் போக்கி, உயிரை ஆட்கொள்பவர் என்பது ஆணவ சொருப ளுகிய கயமுகனைப் பாசக்கயிற்ருற் கட்டி, அங்குசத்தால் அடக்கி, அவன் மலத்தை நீக்கிச் சுத்தனுக்கி, அவனைத் தமக்கு வாகனமாக்கிக்கொண்டு பெரும்பேற்றை அளித்தார் என்பதால் போதரும். இவருடைய துதிக்கை விந்து நாத தத்துவத்தைக் குறிப்பித்து, இவரது ஞானசொருபத்தை

அறிவிக்கின்றது. அடியார்கள் பசு ஞானத்தைக் கவளமாக ஒப்பிக்க, அதனை உண்டு தமது பேழை வயிற்றில் துறுத்துச் சிவஞானத்தைக் கொடுப்பவர் தாமென்பதை உணர்த்தும் பொருட்டுக் கவள உணவாகிய மோதகத்தை ஓர் கையிற் கொண்டார்.

உள்ளடமெனுங் கூடத்தி லூக்கமெனுந்
 தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி
 யிடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
 களித்துண்டு கருணையென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
 நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்.

(திருவிளையாடற்புராணம்)

சிவபெருமான் பஞ்சகிருத்தியாவதிபர் தாமென்பதை ஈசானம் முதலிய ஐந்து திருமுகங்களால் உணர்த்துதல் போல, விநாயகரும் துதிக்கை முதலிய ஐந்து கரங்களால் உணர்த்துகின்றார்.

இவர் உயர்திணைப் பொருளும், அஃறிணைப் பொருளு மாய் விளங்குபவர். யானை முகமும் தேவசரீரமும் உடையவர்.

உயர்திணையு மஃறிணையும் படைத்தளித்துத்
 துடைக்குமுத லொருதானே யென்று
அயர்வற எத்தகையோரு மறிந்துய்யத்
 தெரிக்குமடை யாள மேய்ப்பப்
பெயர்கொளுயர் திணையுமஃ றிணையும்
 விரவிய வுருவிற் பிறங்குவானை
மயர்வடிய வர்க்ககற்றுமொரு மருப்பானை
 விநாயகனை வணங்கு வாமால்.

(சூதசங்கிதை)

# தோத்திரப்பாக்கள்

## (விநாயக புராணம்)

1. பந்த மகற்று மனந்தகுணப்
பரப்பு மெவன்பா லுதிக்குமோ
எந்த வுலக மெவனிடத்தி
லீண்டி யிருந்து கரக்குமோ
சந்த மறையா கமங்க
ளனைத்து மெவன்பாற் றகவருமோ
அந்த இறையாங் கணபதியை
யன்பு கூரத் தொழுகின்றாம்.

2, உலக முழுதும் நீக்கமற
வொன்றாய் நிற்கும் பொருளெவனவ்
வுலகிற் பிறங்கும் விகாரங்க
ளுறாத மேலா மொளியாவன்
உலகம் புரியும் வினைப்பயனை
யூட்டுங் களைக ணெவனந்த
உலக முதலைக் கணபதியை
யுவந்து சரண மடைகின்றாம்.

3. இடர்கள் முழுது மெவனருளால்
எரிவீ ழும்பஞ் செனமாயும்
தொடரு முயிர்க ளெவனருளாற்
சுரர்வாழ் பதியு முறச்செய்யும்
கடவுள் முதலோர்க் கூறின்றிக்
கரும மெவனால் முடிவுறுமத்
தடவு மருப்புக் கணபதிபொற்
சரணஞ் சரண மடைகின்றாம்.

4. மூர்த்தி யாகித் தலமாகி
முந்நீர்க் கங்கை முதலான
தீர்த்த மாகி யறிந்தறியாத்
திறத்தி னுனு முயிர்க்குநலம்
ஆர்த்தி நாளு மறியாமை
யகற்றி யறிவிப் பானெவனப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரணமடைகின்றாம்.

5. செய்யும் வினையின் முதல்யாவன்
செய்யப் படுமப் பொருள்யாவன்
ஐய மின்றி யுளதாகு
மந்தக் கருமப் பயன்யாவன்

உய்யும் வினையின் பயன்விளைவி
ஞூட்டி விடுப்பா னெவனந்தப்
பொய்யி லிறையைக் கணபதியைப்
புரிந்து சரண மடைகின்ரும்.

6. வேத மளந்து மறிவரிய
விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவில் நடம்நவிலும்
விகிர்தன் யாவன் விளங்குபர
நாத முடிவில் வீற்றிருக்கும்
நாத னெவன் எண் குணனெவனப்
போத முதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரண மடைகின்ரும்.

7. மண்ணினேே ரைங் குணமாகி
வதிவா னெவன்நீ ரிடைநான்காய்
நண்ணி யமர்வா னெவன்தீயின்
மூன்ருய் நவில்வான் எவன்வளியின்
எண்ணு மிரண்டு குணமாகி
யியைவா னெவன்வா னிடைஒன்ரும்
அண்ண லெவனக் கணபதியை
அன்பிற் சரண மடைகின்ரும்.

8. பாச வறிவிற் பசுவறிவிற்
பற்றற்கரிய பரன் யாவன்
பாச வறிவும் பசுவறிவும்
பயிலப் பணிக்கும் பரன்யாவன்
பாச வறிவும் பசுவறிவும்
பாற்றி மேலா மறிவான
தேச னெவனக் கணபதியைத்
திகழச் சரண மடைகின்ரும்.

## தோத்திரப் பயன்

9. இந்த நமது தோத்திரத்தை
யாவன் மூன்று தினமும்மைச்
சந்தி களிற்ருேத் திரஞ்செயினுஞ்
சகல கரும சித்திபெறும்
சிந்தை மகிழச் சுகம்பெறும்எண்
தினமுச் சரிக்கின் சதுர்த்தியிடைப்
பந்த மகல ஒரெண்காற்
படிக்கில் அட்ட சித்தியுறும்.

